ஸ்ரீ

# ரமண சரிதம்.

சரிதம்,

அனுக்கிரகம், ரமணபாதமாலை

அடங்கியது.

M. சிவப்ரகாசம் பிள்ளை B. A அவர்கள்

இயற்றியது.

திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீ லக்ஷ்மீவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1923.

ஸ்ரீ

# ரமண சரிதம்.

சரிதம், அனுக்கிரகம், ரமணபாதமாலை

அடங்கியது

M. சிவப்ரகாசம் பிள்ளை B. A. அவர்கள்

இயற்றியது.

திருப்பாதிரிப்புலியூர்

ஸ்ரீ லக்ஷ்மீவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1923.



ஸ்ரீ

# ரமண மஹரிஷி

# சரித்திர சங்கிரகம்.

## முகவுரை



அல்லமப்பிரபுவால் அறிவிக்கப்படும் வரையில், மருளசங்கரென்னும் ஞானியின் பெருமையை நந்திதேவரின் அவதாரமாகிய வசவண்ணரே உணர்ந்தில ரென்றால், பிறக்கும்பொழுதே அருணாசலத்தியானத்துடன் பிறந்து அத்தியானத்தால் அனேக வருடம் மனோநிக்கிரகஞ்செய்து, பதினேழாமாண்டிற் கடவுட்டிருவருளால் திருவண்ணாமலைக் கிழுக்கப்பட்டு, ஆண்டு துறவு பூண்டு, ஆத்மவிசாரமுற்றுப், பலவருடம் அருந்தவமியற்றித், "தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங்கண்டு, பின்னையத்தலைவன்றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத்தீர்ந்து," அத்தலத்தின்கண் குருமூர்த்தமாய் மலைமேல் வீற்றிருந்து, உலகத்தைப் பவித்திரஞ் செய்தருளும் இச்சீவன்முத்தருடைய மகிமை அடியேன் அறியுந்தரத்ததோ? அன்றெனத்தெரிந்தும் இச்சரிதையை இயற்றத்துணிந்த என் மனத்துணிவை மன்னிக்கும்படி அன்பர்களைப் பிரார்த்திக்கின்றேன்

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக் கொண்டற்று."

மு. சிவப்பிரகாசம்

# சரிதம்.

## அகவல்.

### காப்பு.

ரமண சரித்திர ரசத்தைப் பாட
அமலக் கணபதி யடிதுணை யாமே

### நூல்.

பிரம மென்னும் பெயரறி யாமலே
பிரம ஞானம் பெற்ற புலவர்;

கடவு ளின்றிக் காணு முலகம்
நடைபெறு மென்னு நாத்திகச் சூறை

யுலக மெங்கு மோங்கி யடித்து
நிலையைக் குலைத்து நலியுங் கலியி

லான்றிரு நாம மகத்தி னினைத்தவ்
வான்றிரு வருளா லவன்பதம் பெற்றவர்;

ஐம்பொறி நுகர்வா னடைசிற் றின்பே
யிம்மகி தன்னி லெய்துதற் குரிய

பெரும்புரு டார்த்தம் பேறுவே றிலையது
வருவழி யெல்லாம் வரவரப் பெருக்கலே

முதன்மைக் கடன்மாந் தர்க்கெனு மூடமாம்
பதுங்கிப் பாந்த புல்லறி வெழிலி

யில்லறந் துறவற மெனுநன் மறைமொழி
நல்லறி வென்னு நலமிகு முகிலைத்

தலையெடா மற்றடுத்து மறைத்துப்
புலைமுதற் பாவப் புன்மழை சொரிந்தே

யின்புபோன் முளைக்கு மெவ்வப் பயிரைக்
கொன்னுற வளர்க்குமிக் கொடுங்கா லத்தி

லான்ம சுகமே யந்த மில்லா
மேன்மைத் தன்மை விளங்கிய வின்ப

மென்றுமெக் கருமமு மிகந்திட லாய
சன்னி யாசமே தலையதச் சுகத்தில்

விருப்ப மிருந்த முமுட்சுக் கென்றுந்
திருத்தமாய்த் தெரித்த துறவறத் தலைவர்;

அனைய சுகத்தை யடைய வேண்டின்
மனதை மாய்க்க வேண்டு மென்றும்

மாணு மனதை மாய்ப்ப தற்கு
நாணு ரென்னு ஞான விசாரமே

நேர்வழி யென்றந் நெறியி னடந்து
பேர்புகழ் பெற்ற போத குரவர்.

இப்பெரு மகிமை யெய்திய மஹரிஷி
யொப்பில் சிவன்கோ லோச்சிய நாட்டில்

வாத வூரர் வனப்பார் செய்யுளு
நாதன் றேழனர் நல்லிசைப் பதிகமுஞ்

சூட்டித் துதித்த சுழியற் பதியில்
வேட்டற் குரிய வேதியர் குலத்திற்

பராசர மஹரிஷி பழங்கோத் திரத்திற
கிராதத் தன்மை கிஞ்சிலு மின்றி

வக்கிற் றெழிலை வாகாய்ப் பூண்டு
புக்கார் பசித்துயர் போக்கு மருளினர்

91/1



சுந்தர மையர் தொல்தவப் பயனு
யந்தநற் கற்பின ளழகம் மாள்பா

* னிகழ்கலி நாலொடெண் பதாமுறை நிகழத்
தகு பிர மாதியிற் றனுபதி ஞறு

மேடஞ் செவ்வாய் மிதுனங் கேது
வோடுஞ் சசிதே ளுசனு புதனும்

தனுரவி ராகு தனிகுரு கும்பஞ்
சனிமீன் றங்கிட சன்மலக் னந்துலாம்

* புனிதகட் சத்திரம் புணர்மதி தினத்தி
லநந்தை மாக்க ளறிவுபெற் றுய்யப்

பரம னடியார் பயமுந் தீரத்
திருவவ தாரஞ் செய்தனர் மாதோ.

திங்கள் போலச் செழித்து வளர்கையில்
வெங்கட ரமணனென் வினைதீர் நாமம்

பெற்றே ரீட்டுப் பருவம் பெறலுந்
தற்கா லத்தின் றன்மைக் கேற்ப

வாங்கிலப் பள்ளியி லன்புடன் வைத்துப்
பாங்காய்க் கல்வி பயிற்றி வந்தனர்

திண்டுக் கல்லுந் திருமது ரையுமிப்
புண்ணியர் கற்ற புனித பதிகளாம்.

அனைத்தினு மிகப்பெரி தருண சலமெனு
முணர்ச்சி யுரைப்போ ரொருவரு மின்றிப்

---

* னிகழ்கலி யையா யிரமுன் னிகழத் (எனவும் பாடம்)
* (புனிதம்—புனர்பூசம்)

பகுத்தறி வில்லாப் பருவ முதலா
யகத்தில் விளங்க வதையறிந் தடைதற்

குற்று விருப்ப மொழிந்த பொருள்களிற்
பற்றிலாப் பான்மை ெ◌ாருந்திப் பிறன்மேல்

விழைவு வைத்த வனிதை வீட்டிற்
கொ:ழுனன் பணிசெய் கொள்கை போலப்

படித்தும் படியாப் பாடங் களையு
முடனுள பிள்ளைக ளொப்பிக் கையிற்கேட்

டவதா னத்தா லறிந்தொப் பித்து
முவந்திளை யாரோ டொத்துக் கூடிப்

பலமுந் தீரமும் பரிவுங் காட்டிப்
பலவிளை யா ◌டிற் பழகியும் வந்தனர்.

பன்னிய வண்ணம் பதினே ழாண்டின்
முன்பிறந் தாருடன் மூதூர் மதுரையிற்

றந்தை காலந் தனக்குப் பிறகு
தந்தையின் றப்பி சம்பட் சணையி

லாரும் வகுப்பை யடைந்து படிக்கையி
னீரார் வேணி நின்மல னருளால்

விளைந்த வற்றை வினையி னேற்கு
விளங்கிய மட்டில் விளம்பிடு வேனே.

பாட சாலையிற் படித்த வாங்கில
பாடையி லுள்ள பௌதிக நூலா

லுலகப் பொருளெலா மொன்றே யென்றும்
நிலையில வென்றும் நெஞ்சி லுணர்ந்து

சிறிய தந்தையின் சிறப்பார் வசனப்
பெரிய புராணப் பெயரிய நூலைப்

படித்தடி யார்கள் பத்திக் கிரங்கிக்
கடவுள் புரியுங் கருணையின் றிறங்கண்

'டடன்மா னத்தை யோட்டி யுளத்திருந்
துடலிற் றிருநீ றுவப்புட னணிந்து

சுந்த ரேசன் சன்னிதி துன்னி
வந்தனை புரிந்து வளரா று பத்து

மூவர் சிலைகளின் முன்ன ரணுகி
யாவலாய்த் தன்னை யவரினத் தொருவராய்க்

கூட்டிக் கொளும்படி கூவி யிரந்து
நாட்டநீர் விட்டு நைந்துளம் பதறினர்.

முன்வினை யாட்டெலா முடிவுற் றனவே;
மின்னனுர் மோகமும் விளிந்தது முளைக்குமுன்.

அருணு சலத்தை யறிதற் குற்ற
விருப்பிவ் வண்ணம் விளைந்தோர் தினந்தெரு

வருதன் பந்துவை வருவதெங் கிருந்தென
வருணு சலத்திருந் தெனக்கேட் டதிசயித்

தருணு சலமெங் கமர்வ தெனவவர்
திருவண் ணுமலை தெரியா தாவென

மனந்தெளி யாமன் மயக்குற் றிருக்கையிற்
றனுவிலோ ரெரிவைத் தலைய னேவினன்.

சகிக்க வொணுமற் றளர்ந்து வருந்தி
யகத்தில் விடுமுறை யாகிய வொருநா

ளொப்பியாப் பாட மொன்றை யெழுதக்
கைப்பிடி நழுவிக் கருவி வீழ

வெழுதுதன் மறந்துள மேகாக் கிரமா
யழுந்தித் தியானத் தமர்ந்ததை மூத்தோர்

கண்டு திருத்தக் கருதி யவருடன்
விண்டனர் யோக விருப்ப மிருக்கி

லீங்கென் வேலை யேகுக வென்றே.
ஆங்கொரு பதிலு மறைந்தில ராகி

மின்சார மென்று விளம்பிடு சத்தியை
யன்று காட்ட வாசான் வரும்படி

சொன்ன வண்ணந் துரிதமாச் செல்வதா
முன்வந் தாருடன் மொழியமற் றவர்தாங்

கொடுக்க வேண்டிய கழகக் கூலியை
யெடுத்துப் போம்படி யேவின ரேவலும்

பெட்டியைத் திறந்தளி பணத்தைப் பெற்றுச்
சட்டென் றொருசிறு சீட்டிற் றமென்

றந்தை தாளைத் தேடிச் செல்கிறேன்
சிந்தை வருந்தித் தேடற்க நீவிரென்

றெழுதி யதையோ ரிடத்தில் வைத்துப்
பழைய தேசப் படமொன் றெடுத்ததிற்

றிருவண் ணமலைத் தலத்தைத் தேர்ந்ததற்
கிருப்புப் பாதை யில்லை யென்றுந்

திண்டி வனம்வரை சென்றப் பாதையா
யண்டையிற் கண்ட வண்ணு மலைக்குப்

போகலா மென்றும் புத்தியி லெண்ணி
வேக மார்புகை வண்டிகள் விளங்குஞ்

சாலையை நோக்கிச் சென்றனர் தமையன்
வேலையீங் கென்னென விளம்பிய வாறே.

சென்னை நகர்க்குச் செல்லும் வண்டி
நண்ணற் குரிய நாழிகை தப்பிச்

சென்றன ரெனினுந் தெய்வச் செயலா
யன்றது வந்த தவர்போ யுற்றபின்.

திண்டி வனத்துச் சீட்டு வாங்கி
வண்டி யேறியோர் மூலையில் வைகி

விழுப்புரம் போம்வரை விழித்தியா னத்தி
லழுந்தி யிருந்தன ரறியா துபாதிகள்.

அவ்வூர்ச் சேரலு மண்டையி லிருந்தோ
ரெவ்வூர் போகிறீ ரென்றுகேட் டெழுப்ப

வண்ணா மலைக்கென் றறைந்துமற் றவரால்
வண்டி போகும் வரலா றறிந்திழிக்

தாரி னுட்சென் றுறுபசி யாறி
யேறி வண்டி யெஞ்சிய பொருள்கொடு

மாம்பழப் பட்டு வரையிற் சென்று
பூம்பதம் வருந்தப் பூமியி னடந்துபோ

யறையணி நல்லூ ரடைந்தங் குள்ள
வறையணி நாத னாலயம் புகுந்தோ

ரிலிங்கப் பாங்க ரிருக்கையிற் றியானத்
திலங்கிய தோர்பெரு மெழிலார் சோதி.

சுவாமி தமக்குத் தோன்றிவிட் டனரென்
றவாவுட னேக்கநு மவ்விலிங் கத்தைக்

கல்வடி வன்றிக் கண்டில ரொன்றுமே.
*துல்லிய மில்லான் றுணைத்தாட் பூசை

பண்ண வந்த பார்ப்பன ருடன் போய்
நண்ணிக் கோவலூர் நாடுவீ ரட்டங்

கதவைக் காப்புசெய் காலம் வரையிற்
சிதையாத் தியானஞ் செய்துகொண் டிருந்துபின்

னின்னியக் கார ரெய்துதற் குரிய
வன்னத் தினையவ ரருளாற் பெற்றதின்

மனஞ்செல் லாமன் மறுக்கவுஞ் சிறிதுண்
டினிய தியானத் திரவையுங் கழித்தனர்.

மறுநாட் காலையோர் மறையோ ரிடத்திற்
குறைந்த தொகைக்குக் கடுக்கனைக் கொடுத்துப்

புகைவண்டி யேறிப் போகையி லருகி
லகமிகக் களிப்புற் றண்ணு மலைகண்

டிறங்கி வண்டிவிட் டேகிக் கோயிலு
ளருண சலேசனை யணுகி வணங்கி

சன்னிதி வந்துவிட் டேனெனச் சாற்றலுந்
தன்னுட றன்னைத் தகித்து வந்த

வெரிவு நின்றதவ் விறையி னருளினால்;
அறிகிலேன் மற்றென் னடுத்தனவென்றே.

அடைந்தப் பொழுதே யையன் குளக்கரை
குடுமியை மழித்துக் கொண்டு மிகுந்த

---

* துல்லியம்-உவமை

பொருளோ டாடை பூணு நூல்களை
யெறிந்தோர் கோவண மிடையிற் றரித்துத்

திரும்பிப் புகுந்து திருவா லயத்து
ளருணை சலத்தை யாய்ந்த மனதைத்

திருப்பினா னெனத் தன்னைத் தேடி
யரிய நிட்டையி லமர்ந்தனர் மௌனியாய்.

ஆதியிற் சிலநா ளயல்வரு ணத்தார்
சாத முண்ணச் சகியா துள்ளம்

பழமும் பாலும் பருகிப் பின்ன
ரொழித்தன ரந்த வுலகா சாரமும்.

தேய மெல்லாந் துதிக்கச் சிறந்தவ
ராயிரங் காலுள வகன்ற மண்டபஞ்

சுப்பிர மணியர் தூய வாலயம்
பொற்பறு பூரணப் பாதாள லிங்க

மீசை மாறு விலுப்பை மரத்தடி
வாகன மண்டபம் வாழைத் தோட்ட

மென்னு மிடங்களி லிருந்தும் பலமதி
பின்குரு மூர்த்தமென் பெயருள மடத்தின்

றம்பிரான் வேண்டத் தாமுடன் சென்றே
யம்மடத் திருந்து மருகினி லுள்ள

தோட்டத் துள்ளொரு தொல்லித ணமைக்கக்
கூட்ட மின்றியக் குச்சினுட் டங்கியுஞ்

சுமாரிரண் டாண்டு சொரூபந் தன்னிற்
சமாதி செய்தனர் தைல தாரைபோல்.

குருமூர்த் தத்துங் கோயி லுளுமிவர்
புரிமா தவத்தின் பெருமையை யுணரி

னற்றவ மென்று ஞான மென்று
முற்கா லத்தின் முயன்றன ரென்றுஞ்

சாத்தி ரங்களிற் சாற்றுவ தல்லா
னேத்தி ரஙகளா னேரிற் கண்டவ

ருளரோ வென்றை யுற்ற வெனைப்போற்
களங்க மெய்திக் கலங்கி டாரே.

இருந்த விடத்திற் கேகி யளித்ததை
யருந்தியோர் வேளை யற்பமாய் மருந்துபோன்

மலசலஞ் சுருங்கி மனமல மங்கி
யலம்பல் விளக்க லறவின் மூழ்க

லாகிய கருமமு மகற்றி வினைசெய்
ஆகமோ வியம்போ லசைவற வமர்ந்து

சகலகே வலங்களிற் சாரா துளத்தை
யகமெனுஞ் சுத்த வான்ம நிலையி

விருத்தி யந்த வேகாந் தத்தி
லருந்தி வந்தன ரான்ம சுகத்தையே.

கல்லா லெறிந்துங் காய மீது
பொல்லார் சிறுநீர் பொழிந்து மெதிரி

லோட்டை மட்கல முடைத்தும் வேறுதீச்
சேட்டைகள் செய்துஞ் சித்தஞ் சலித்திலர்

தலைமயிர் விரிந்து தனிர்நகம் வளர்ந்து
மலர்ந்து திருமுக மற்றவை கூம்பி

விழிக ளிரண்டும் வெளிநோக் கின்றி
யழிந்து தசையழ கார்ந்து தவவழ

கத்திப் பஞ்சர மாகி யுடல
மித்தவ முனிவ ரிலங்கின ரக்கால்.

சிற்சுக மதனிற் சித்தம் லயமா
யற்பமும் பிராண னசையா தொடுங்கி

யிரத்த நாடிக ளியக்கமு நின்று
மரித்த மறிபோல் விழியிமை யாம

லிறந்தன ரோவென் றெண்ணங் கொளும்படி
சிறந்து விளங்கினர் சிற்சில சமயம்.

சகசநிர் விகற்ப சமாதி சித்தித்
தகமெனு மூல வவித்தை யழிந்து

கருதவுங் கழறவுங் கூடா நிலையை
மருவிப் பின்ன ரவ்விட மாறிக்

குறுகிப் பவளக் குன்றை யதன்கணுங்
கிரிமிசை யேறிக் கீழ்க்குகைக் கண்ணுங்

குகைநம சிவாயர் கோயிற் கண்ணு
மிகுசாந்த மூர்த்தியாய் விளங்கிச் சுமாரிரு

வருடம் வதிந்து வந்தன ரக்கா
லருந்தினர் தெருக்களி லளித்திடு பிட்சையும்.

இதன்பின் பெரிய வெகின்க ளிடையிற்
கதித்தோ டருவியின் கரையழ காக

விருபாட்ச மென்று விளங்கு குகைசேர்ந்
திருந்துபல் லாண்டுமுன் னிருந்த படியே

பூதலத் தினர்பாற் பேரருள் பொருந்தி
மாதர் திருவாய் மலர்ந்து சகல

வேதா கமங்களின் விரிபொருள் சுருக்கி
வாதாட லின்றி வந்தடை வோர்க்குப்

பேதைமை நீங்கிப் போத முதித்திடத்
தீதிலின் மொழிகளாற் செப்புவா ராயினர்

திருமுக மலர்ந்து செந்தா மரைபோற்
கருணை நிறைந்து கண்கள் கடல்போற்

றலைமுண் டிதமாய்த் தன்னுரு பொன்னைக்
கலையோர் கீளார் கோவணங் கவின

வளவு படாத வாற்றற் குறியுடன்
விளங்குவ ராஞர் வேளை வென்றவர்.

தேகப் பற்றைத் தெறித்தவ ரெனினுந்
தேக முஞ்சிவ சொரூபமாத் தேறலாற்

செய்தற் குரிய சுத்திகள் செய்து
துய்ப்பா ராஞர் சுவைபா ராம

லெத்தன் மைத்தோ ரீயு முணவையுங்
கர்த்தன் பூசனை கைக்கொளு மாபோல்.

முமுட்சுக்க ளன்றி மூடான் மாக்கள்
சமயா சாரந் தள்ளிற் றீதே

விளையு மென்று விளக்கத் திருநுதற்
களன்களிற் றினமுங் கவினுறத் திருநீ

றணிவா ராஞ ரனைத்து நீத்தவர்;
பணிந்து சரியை பண்ண விடினுங்

குற்ற மென்று குறித்தற் பொருட்டுக்
கற்றவர் சுற்றுங் கிரிப்பிர தக்ஷிணஞ்

சிற்சில சமயஞ் செய்வா ராஞ
ரற்றவர் பேத மற்பமு மின்றியே.

விண்மணி யுலகில் விகார முறும
லெண்ணில் கரும மியற்றுதல் போல

விரும்பு மடியார் வினைகள் தீரக்
கருப்புபோ லினிக்குங் காட்சிதந் தருளியு

மனமே பகையதை மாய்மினென் றிசைத்தம்
மனதை மாய்க்கும் வழியறி வித்தும்

பலவித நூல்களைப் படித்துக் காட்டிக்
கலைகளி னுத்த கருத்தை விளக்கியுங்

குடும்பக் குறைகள் கூறிடு வோர்கள்
மடமற நீங்கி மகிழ்வுற வருளியுங்

குரங்கா திகட்கிரை கொடுத்துத் தமக்குச்
சருவ சீவருஞ் சமமென் றுணர்த்தியு

மச்சுபோற் கையா லழகுற வெழுதியு
மச்சங் கொடாம லமர்ந்தடி யாருடன்

குடுக்கை கமண்டலங் கோல்முத லானபல்
வடிவப் பொருள்களை வனப்புறச் செய்துஞ்

சிலசம யங்களிற் சமையல் செய்து
மிலைகள் தைத்து மெடுத்துப் படைத்து

மெத்தொழில் செய்யினு மேதமின் முத்தன்
சித்த முறையுஞ் சிவத்தென விளக்கியுங்

தேச மெங்குந் திருப்புகழ் பரப்பி
வாசஞ் செய்தனர் வையமின் பற்றிட.

திருமூலைப் பாலெனுந் தீர்த்தக் கரையி
னருகி லுளவோ ரழகார் குகையிலும்

வதிந்தனர் மன்னுபல் வேனிற் காலம்.
பதிமஹா மாரியாற் பாழ்படு போழ்து

பச்சை யம்மன் பவனத் திருந்தன
ரச்சமுஞ் சோகமு மகற்றி நின்றவர்

குருமூர்த் தத்தி லருந்தவஞ் செய்கையிற்
பிறந்த விடத்தின் பெயரைச் சொலும்படி

வருந்தியோ ரன்பர் வணங்கி வேண்டத்
திருச்சுழி யென்று தெரித்தன ரெழுதி.

சிறிய தந்தையின் செவிக்கீ தெட்டிப்
பரிந்து வந்து பாாத்து மீண்டனர்.

பவளக் குன்றம் பற்றின பிறகு
தவத்திற் சிறந்த தாயுந் தமையனுஞ்

சென்று கண்டுதந் தேய மழைத்தனர்;
நன்றென் றிசைந்திலர் நின்றவ ருள்வழி;

நடக்கற் பாலது நடந்தே தீரு
நடவாத தென்றும் நடவா தென்றிவ

ரெழுதிக் காட்டலு மேங்கித் திரும்பின
ரழுங்கா தவருள மாற்றற் பாலதோ?

அடைந்த பின்றிரு வண்ணா மலையை
யிடுவோ ரொருவரு மின்றித் தானே

பிராமண சுவாமிப் பெயரு ரெங்கும்
பராவிப் பாரிற் பிரசித்தி யுற்றது.

விருபாட்சஞ் சேர்ந்தபின் வெகுநாள் கழித்தில
ரரிய நிலையை யாய்ந்துநன் குணர்ந்தவர்

காவிய கண்ட கணபதி பண்டிதர்
மேவி ரமண மஹரிஷிவெல்பெயர்

பரவப் புனைந்தருள் புரிகவென் றியம்ப
வொருவித பதிலு முரையா திருந்தனர்.

அந்த நாண்முத லப்பெ ய ரன்பர்
சிந்தைக் கினிய திருவமு தாயதே.

பதினை யாண்டுகள் படர்ந்த பின்னர்த்
துதிசெய் தொண்டர் சிலர்நூ தனமாய்

நீர்நல னிழனல னிலையுற் றமைந்த
சீர்மிகு கந்தாச் சிரம மென்னு

முன்னத மான வுத்தம தலத்திற்
சுண்ணச் சாந்தாற் பண்ணுதா பதத்தை

மேவி யருளி மேன்மேல் வந்து
சேவித் தடைவோர் சிறுமைதீர்த் தருள்கிறார்.

ஏழு வருட மேகிய பின்ன
ரேழொன் றுளதென் றுலகு தெளிந்திட

வக்கவி னிடமகன் றக்கிரி சாரலி
லக்கினி தீர்த்தத தருகமைந் துளதன்

றாயின் சமாதியைச் சார்ந்து வைகிறார்
தீயவ ரெனினுந் தாயினு மருள்பவர்.

அருணு சலேச னருளினை வியந்திவ
ரருளிச் செய்த வருந்தோத் திரங்களாம்

விஞ்சை மிஞ்சட் சரமண மாலை
பஞ்ச ரத்னம் பதிகமட் டகங்களு

மினிது விளக்கு மிவர்தாம் பெற்ற
வனுபூ தியின தழிவில் சிறப்பை.

அவாவினை யகற்று மாற்றினை யுணர்த்தும்
விவேக சூடா மணியென விரிநூ

லத்தா மலக வான்ம தோத்திரம்
சித்சுக விளக்கஞ் செய்குரு துதியுந்

தேவ னுமைக்குத் திருவாய் மலர்ந்த
தேவிகா லோத்தரத் திருவா கமத்தில்

ஞான சார நவில்பட லத்தையுந்
தேனூர் தமிழிற் றெள்ளிய நடையில்

வாசக மாகவும் விருத்த மற்று
மாசில் வெண்பா வாகவு மருளினர்.

பத்தி யோகம் பரஞான மென்னு
முத்தி மார்க்க மூன றையுஞ் சுருக்கிச்

சொல்லரு ணசல பஞ்சகத் துதியினைத்
தொல்லிரு வடதென் மொழிகளிற் றொடுத்தனர்.

புங்கவர் போற்றுந் தக்ஷிணு மூர்த்திமேற்
சங்கரா சாரியர் சாற்றி யருளிய

தோத்திர மறுசீர் விருத்தமாத் தூத்தமிழ்
சேர்த்தனர் கருத்துடன் சிட்டர் களித்திட

பத்த ருட்சிலர் பணிந்து வினவிய
வுத்தம வினுக்களு முவந்திய ளித்த

விடைகளும் விளங்கு ரமண கீதையை
வடமொழிக் கிரந்தமா வரைந்துளர் காவிய

கண்ட கணபதி முனிவர் கற்று
மண்ட லத்தோர் மாண்பய னெய்தவே.

மட்கல சத்தில் வைத்த தேனையும்
பெட்புடன் கொள்வர் பெரியோ ரதுபோற்

சொற்பிழை பொறுத்துச் சொல்லிய பொருளி
னற்சுவை கொள்ள னன்னூல்

கற்றவர்க் குரிய கடனு கும்மே.

---

# அனுக்கிரகம்

## அகவல்

இரமண மஹரிஷி யெனும்பெயர் போற்றி;
இரமிக்கச் செயுநின் னெழிலுரு போற்றி;

இரமிய மாநின் னின்மொழி போற்றி;
இரமிய மமர்நின் னிதச்செயல் போற்றி;

அஞ்ச லெனுநின் னருள்விழி போற்றி;
விஞ்சு வினைசுடு வேல்விழி போற்றி;

தப்பு வழிகளிற் றவித்திடு மனதின்
வெப்ப மொழிக்கும் வெல்கழல் போற்றி;

சித்தஞ் சலித்துச் சோர்ந்திடு சீவர்
பத்தி யில்லாப் பாவிக ளாயினுஞ்

சிசுத்துயர் கண்டு தேற்றுந் தாய்போற்
கசிந்து கருணை கண்ணீற் றதும்ப

வின்சொற் சொல்லி யேந்து மனதை
மன்ற தேற்று மன்ன போற்றி;

அன்னையு மத்தனு மாகி யடைவோர்க்
கன்ன மளித்து மறிவைப் பெருக்கியு

மின்ன லொழிக்கு மிறைவ போற்றி;
அன்பே யுருவா யமர்ந்தாய் போற்றி;

மக்கண் மழலை மகிழ்ந்து கேட்குந்
தக்க வன்புள தந்தை தாய்போற்

கல்வி யில்லேன் கழறு மொழியிற்
பல்வகைப் பட்ட பிழைக ளுளவேன்

றருவருப் புறும லைய நீகேட்
டருள்செய் வாயென் றகந்துணி கின்றேன்.

கடையே னுங்கிலக் கலாசா லையினிற்
படித்த பொழுதென் மடமை யுளத்தி

லுதித்த தோர்வினு வுழனு னெரென.
இதற்கு விடையினை யினிய நூல்களிற்

றேடிப் பார்த்துந் தெரிந்த நின்னை
நாடிக் கேட்டும் நாயேன் சித்த

மசுத்த மிருதியா லாழ்ந்தறி யாமல்
பசுபதி யருளைப் பற்றவெண் ணுமற்

கண்ட வழிகளிற் களித்துத் திரிகையிற்
பண்டை வினையாற் பலதுய ரெய்தி

யறிவு கலங்கிநின் னருள்பெற் றுய்யக்
கருதிநின் னடைதலுங் கனிந்த மொழிகளா

னெனினுஞ் சொல்லி னல்லர்த் தமதா
யூனுடனிதனு னூற்றும் வேறாய்

நாச மிலதாய் ஞான மயமாய்
மாசுக மாயோர் வத்து வுளதா

மப்பர வத்துவை யறிந்திட வேண்டி
னப்பொரு ளல்லா வாகந் தனைநா

னாகக் கருது மபிமா னத்தை
யேகச் செய்துபின் யானு ரென்று

விசாரிப் பதுவே மேல்வழி யென்றும்
விசாரிக் குங்கால் வெளியிற் கிளப்பி

வாதனை யளவில வந்து தடுக்கினும்
பீதி யுறுமற் பீடுள சூரன்

கோட்டை யொன்றைக் கொள்ளக் கருதிற்
கோட்டையி லிருந்து குதித்தெழு பகைவரை

வரவர விடாமல் வாளான் மடித்தவ்
வரும்படை யெறிந்தவ் வரணிற் புகல்போ

லிறையள வேனு மெழுந்திடு நினைவை
நிறைவேற் றற்கு நேசியா தந்து

தோன்றுவ தியார்க்கெனிற் றோன்று மெனக்கென
நான்யா ரெனினந் நினைவு நாசமா

மெழவெழ நினைவுக ளெல்லா மிவ்வண
மழித்திடின் முடிவிலவ் வகமெனு நினைவு

மொழிந்திடுந் தானெனு முயர்வொப் பில்லா
விழுப்பொரு ளொன்றுமே விளங்கிடு மென்றுங்

கடலி னடியிற் கிடக்கு முத்தை
யடைய வேண்டி யதனுட் புகுவோன்

றன்னைத் தடநீர் தடுத்து வெளியி
லின்னன் மிகச்செய் தெழுப்பி விடினு

மடுத்தடுத் தாழ்ந்தாழ்ந் ததனுண் மூழ்கி
யெடுப்பது போல வெழின்முத் ததனைத்

தன்னை யாரெனத் தான்றே டுங்கா
லன்னிய நினைவுக ளனேக மோடி

தடுத்திர்த் துலகிற் றள்ளுந் தளினும்
பிடித்ததைப் பின்விடாப் பேதை போல

மூழ்கி மூழ்கி மூழ்கித் தன்னு
ளாழ்ந்திடிற் றன்னை யறியலா மென்று

மந்த வறிவே யரியவீ டென்றுஞ்
சிந்தையிற் பதித்தருள் செய்தனை யன்றியு

மடியேன் கரண மனைத்துநின் சத்தியா
லொடுங்கப் பண்ணி யுணர்வே யுருவாய்க்

காய மிதனுட் கலந்த வென்னை
யாயும் வழியையு மறிவித் தருளினை.

உன்ற னுண்மை யுபதே சப்படி
நின்றனுட் டிக்க நேயமாய் முயற்சி

செய்யுங் காலை சேயிழை யார்மேல்
வெய்ய காமமென் மனதில் விளைந்தே

யலக்கண் மிகச்செய வாற்றலொண் ணாமற்
கலியா ணஞ்செயக் கருத்தி லுன்னிப்

பொருட்குறை வாலே புத்தி கலங்கிக்
கருதினேன் றுயர்க்கரை காண்வழி யாதென.

சாக்கிர மென்றுஞ் சார்கன வென்றுந்
தூக்க மென்றுஞ் சொல்லப் பட்ட

வவத்தைக ளொழிய வனுபவம் வேறிலை;
இவற்று ளுலகமுன் னிரண்டிற் றோன்று

மூலக மென்பதை யுற்றுப் பார்க்கையிற்
புலன்க ளைந்தும் புலன்களி னினைவுமா

யின்பமுந் துன்பமு மிவற்றி னினைவுமாய்த்
துன்னித் தோன்றுந் தோற்றங் களைத்தவிர்த்

தில்லைவே றென்பதற் கின்றைய மெனினு
மல்லலை யொழிக்கு மாற்றலோ வெனக்கிலை

அறிவு ஞாபக மன்றி யென்னிடம்
பிறிதொரு சத்தியுந் தெரிதர வில்லை.

பொறிக ளுணர்த்திய பொருள்கள் பின்னர்
பொறிக டமக்குப் புலனு காமன்

மனதின் மட்டில் விளங்கமுன் பொறிகளா
லனுபவித் ததாக வறிவில் விளங்கலு

மனதிற் கண்டவை மறைந்துபின் னெழமுன்
மனதில் வந்ததா விளங்கலு மறிவில்

ஞாபக மென்று நவிலப் படுமாம்.
ஞாப கம்மே நசையும் வெறுப்புமாம்

சகமுஞ் சடலமென் சிருட்டிக ளல்ல;
சகத்தையு முடலையுஞ் சிருட்டித் தவரார்?

படைப்பவ ரின்றிப் பார்முத லாய
சடப்பொரு டாமே தோன்று மென்னி

னியம மிலாததை நிகழ்ந்திட வேண்டும்
நியமங் காண்டலி னியமிப் பவனு

மியற்கை யறிவு மெல்லையி லுலகைப்
பயந்தளித் தழிக்கும் பராமாஞ் சத்தியு

முளனு யொருவித வுத்தே சத்துட
னளவி லுயிரை யாகத் தோடு

கூட்டியும் பிரித்துங் காட்டியு மறைத்து
மாட்டு பவனு யருளார்ந் தவனு

யிறைவ னொருவ னிருக்க வேண்டுங்
குறைகளை யவனிடங் கூறுது மென்று

கருதி முடித்துக் கடவுளே கருத்தனே
யரனே யருளே யண்ணலே யுனையலாற்

சரணவே றில்லை தமியேன் செய்துள
வரிய பிழைபொறுத் தடியிற் கண்ட

பிரசினங் களுக்குப் பதிலிராப் பிரியுமுன்
வரைந்திட் டேனும் வரைவினுக் கிழல

தரிய காட்சிதந் தறைந்திட் டேனு
மருள்க வென்று மருள்வா யென்னி

லொழுகக் கடவே னுறுதியா யவ்வழி
கழறு யென்னிற் கருணா கரனுய்ப்

பராபர னருணைப் பதியி லிருக்கும்
பிராமண சுவாமிகள் பெருமதி யொன்றே

திரமாய்த் தேரத் தக்க தாகையாற்
றெரிந்தவா சிறிதுந் தவறு தொழுகக்

கடவே னென்றுங் கழறிய விவையெலா
முடிவா யெழுதியம் முழுவின் ணப்ப

மத்தி முகவ னுலைய மொன்றில்
வைத்தனன் வரைந்த வினுக்க ளவையெனிற்

றன்பமியாதுந் தொடரா தகற்றற்
கென்செய வேண்டுமா னிச்சகத் தென்றுங்

கருத்திற் குறித்தவோர் கன்னி தன்னை
யறிவிலேன் மணஞ்செய லாமோ வென்று

மாகா தெனிலே னாகா தென்று
மாகு மென்னி லதற்கு வேண்டுந்

திரவிய மெப்படித் தேடுவ தென்று
முரைத்த வினையே யொருவிதத் தேனு

மதற்கோர் விடையு மடைந்தில னதனா
லுதவுவாய் நீயென் றுன்பத நணுகி

யாண்டு சின்னா ளடியேன் காத்தும்
வேண்டா தொன்றும் விரிமன மடக்கித்

தன்னை யாய்ந்து தானிருப் பதுவே
நன்மை யடையு நல்வழி யென்று

நடந்து காட்டி நிலையி னாட்டினைத்
தொடர்ந்து பொருளுந் தோகையுங் கிடைக்கும்

வழியைக் கேட்பது வழுவென வெண்ணி
மொழியா தென்குறை மோனமாய்த் திருப்ப

வெண்ணணி யிருக்கையி லெந்தா யொருநா
ணண்ணிய பலபேர் நடுவி னீயுற்

றென்னை யருகி லிருக்கச் செய்தபி
னுன்னைச் சுற்றி யொள்ளொளி வீசக்

கனக மயமாக் காணுமோர் குழந்தை
யுனதெழி லடைந்த வுச்சியி லிருந்து

வெளிவர மீண்டு மறைந்த ததனுளே.
எளியேற் கிவ்வண மிரண்டு மூன்று

தடவைகள் காட்சி தந்தருள் புரிந்தனை
கடவு ளுளனெனக் கருத்திற் றேறி

யடங்கா மகிழ்வுகொண் டழுது விம்மி
யுடனுள வடியரோ டுரைத்திட வதனைக்

கண்டவ ருண்டே கஞ்சாக் குணமென
விண்டனர் பற்பல விகட வார்த்தைகள்.

மறுநாண் மாலை மறையோய் நின்முன்
னறிவிலே னிருந்தி டமயத் தருளிய

* காட்சியைக் கழறக் கடையனும் வலனோ
மாட்சிமை யுளமுழு மதியம் பலசேர்ந்

தொருங்கு வீசு மொளியைப் போலுனை
நெருங்கிய விடமெலா நிகரிலாச் சோதி

சூழ்ந்திடக் கண்டேன் சுடர்விடு பொன்னைத்
தாழ்ந்திடச் செய்யுந் தினகரன் றனதொளி

விளங்கிய துன்றிரு மேனி யெல்லாம் ;
நளினக் கண்க ணல்லருள் சொரிந்தன ;

இறைவர்க் கிறைவன திருமுகம் பேரமுங்
குறைவறக் கொடுக்குங் குணமும் விளங்கின.

துதைந்து பின்னர்த் தூவெண் ணீற்றொளி
கதிர்விடு நினது காய மெங்கும்

விளங்கிடக் கண்டேன் வினையேன் கண்ணிக
ளுளமுழு நீரா யுருகிக் கரைந்தது.

---

* இஃது நிகழ்ந்தது ப்ரமாதீச வருஷம் சித்திரையீ இருபத்து மூன்றாந்தேதி (5-5-1913.)

கண்ணுற் காட்சிகள் கண்ட துண்டோ
னண்மையி லிருந்தோ ரவைகண் டிலராம்.

வாயை மலர்த்திநான் வினவவு மில்லை ;
வாயை மலர்த்திநீ விள்ளவு மில்லை.

இதன்பின் னடுத்த விரண்டாந் தினத்திற்
சுதையுரு வாம் ஓம் சுப்ர மண்யமென்

றுன்சன் னிதியி லுச்சரித் திருக்கையி
லுன்றிரு மேனி யுயர்பளிங் கைப்போற்

கனவொளி வீசக் கண்டின் பெய்தி
யனைய சுகமொழித் தலைதற் கஞ்சினேன்.

சோதி மயமாத் தோற்றம் பலதரம்
பேதுறு காலை பெரிது முவந்து

நனவிலுங் கனவிலு நல்கினை யெந்தாய்.
உனது பேரரு ளுரைக்கற் பாற்றோ ?

காமம் வெகுளி கட்புலால் பொய்யெனு
நாம முற்று நல்லோர் நடுங்குஞ்

சகல பாவமுஞ் சார்ந்த பாவி ;
சகல விதத்துஞ் சையெனத் தக்கவன் ;

பின்னும் பின்னும் பிழையிற் பயிலா
தென்னை யடக்கி யெழிலா

ருன்பதம் பற்றியா னுய்ந்திட வருள்கவே.

அனுக்கிரக அகவல் முற்றிற்று.

ஓம். தத். ஸத்.

ஸ்ரீ

# ரமணபாதமாலை

## வாழ்த்து

### காப்பு.

குருமணி ரமணன் திருவடி வாழ்த்தக்
கரிமுகக் கணபதி கழலிணை தொழுவாம்.

வாழ்க வாழ்க வாழ்க வாழ்க
ரமணன் பாதம் வாழ்கவே.
வாழ்க வாழ்க வாழ்க வாழ்க
வாழ்க வென்றும் வாழ்கவே.

1 அருளே யுருவ மாகி வந்த
வாசான் பாதம் வாழ்கவே
மருளை நீக்கித் தெருள ளிக்கு
மறையோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

2 காண்போர் மனதைக் கவர்ந்து கொள்ளுங்
கடவுள் பாதம் வாழ்கவே
வேண்டல் வெறுத்த விரண்டு மில்லா
விமலன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

3 சோதி மயமாக் காட்சி யருளுஞ்
சுவாமி பாதம் வாழ்கவே
ஆதி பகவ னருளைப் பெற்ற
வன்பன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

4 மெய்யு ணர்ந்து முற்று நீத்த
மெய்யன் பாதம் வாழ்கவே
உய்யும் வழியை யுளவா றுணர்த்து
முரவோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

5 அறிந்து மறிந்தோ ணுகக் காட்டா
வறிஞன் பாதம வாழ்கவே
சிறந்த பத்தி நெறியு ணர்த்துஞ்
செம்மல் பாதம் வாழ்கவே. (வாழ்க)

6 அஞ்சி யடைவோர்க் கபய மருளு
மண்ணல் பாதம் வாழ்கவே
நஞ்சு மமுத மாகக் கொள்ளு
நாதன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

7 பாப மெல்லாம் போக்க டிக்கும்
பரமன் பாதம் வாழ்கவே
ஆபத் தொன்று மணுக வொட்டா
வப்பன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

8 இன்னு செயினு மினிய செய்யு
மிறைவன் பாதம் வாழ்கவே
கன்னேர் நெஞ்சுங் கனியச் செய்யுங்
கர்த்தன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

9 வான்போற் கைம்மா றொன்றும் வேண்டா
வள்ளல் பாதம் வாழ்கவே
தேன்போ லினிக்குந் திருவாக் குள்ள
தேவன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

10 நாணு ரெனப்பா ரனியம் விடென்று
நவில்வோன் பாதம் வாழ்கவே
தாணுப் விட்டாற் றுயர்போ மென்னுஞ்
சாந்தன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

11 ஆசை யுடனு னலனென் ஞான
மளிப்போன் பாதம் வாழ்கவே
ஈசன் மேலெச் சுமையும் போடென்
றிசைப்போன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

12 எப்பா ரத்தையு மேற்கு மிறையென்
றிறுப்போன் பாதம் வாழ்கவே
செப்பிய வழியி னின்றி டென்னுஞ்
சீரோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

13 கடவுட் செயலுரு வெல்லா மென்று
கதிப்போன் பாதம் வாழ்கவே
கெடுப்ப தகமே வேறல வென்று
கிளப்போன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

14 நானென் றெழுமே ததுமன மென்று
நவில்வோன் பாதம் வாழ்கவே
ஞான திருட்டி யதன்லய மென்று
நடிப்போன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

15 ஒன்று நினையா திருசும் மாவென்
றுரைப்போன் பாதம் வாழ்கவே
என்று முளத்தை யிருத்துன் னிடத்தென்
றிசைப்போன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

16 ஆன்ம விசார மயர்ந்து விடேலென்
றறைவோன் பாதம் வாழ்கவே
ஆன்ம சொரூப மடையும் வரையென்
றருள்வோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

17 ஊனே டுற்ற வுறவொ ழியுமென்
றுரைப்போன் பாதம் வாழ்கவே
நானு ரென்வி சாரத் தாலென்
னல்லோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

18 ஆனந் தந்தான் மேன்மே லெழுமென்
றறைவோன் பாதம் வாழ்கவே
நானுள் ளழுந்த வழுந்த வென்னு
நபபி பாதம் வாழ்கவே. (வாழ்க)

19 இறைவற் கலையு மனதை யீயென்
றிசைப்போன் பாதம் வாழ்கவே
பெரிய பத்தி யதுவே யென்னும்
பிரியன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

20 உன்னு ளுளவீ சனைவி டேலென்
றுரைப்போன் பாதம் வாழ்கவே
அன்னி யம்போல் வரினும் வெளி யென்
றறைவோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

21 தாவி னயலிற் றடுமன தென்னுந்
தலைவன் பாதம் வாழ்கவே
ஆவியை யீசற் களித்த லதுவென்
றருள்வோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

22 எழும்பு நினைவுக ளெல்லா நசுக்கென்
றிசைப்போன் பாதம் வாழ்கவே
வழுத்து வைராக் கியமது வென்று
விரிப்போன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

23 மனம டக்கும் வழிபல வென்னு
மொழிவோன் பாதம் வாழ்கவே
அனைத்தின் மேல்வி சார மாமென்
றறைவோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

24 வேறு வழியி லடக்கின் மீளு
மென்போன் பாதம் வாழ்கவே
ஏறு வாச னையினால் வெளியென்
றிசைப்போன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

25 செபிக்கின் மந்த்ரஞ் சித்த மொடுங்கு
மென்போன் பாதம் வாழ்கவே
செபம்வி சார சாதன மென்னுஞ்
சித்தன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

26 மூர்த்த பனதை யொருமை செயுமென்
மூர்த்தி பாதம் வாழ்கவே
ஓர்ந்தி டதுவுஞ் சாதன மாமென்
றுரைப்போன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

27 பிராணை னொடுங்கிற் பிரஞ்ஞை யொடுங்கு
மென்போன் பாதம் வாழ்கவே
பிராணா யாமஞ் சாதன மென்னும்
பெரியோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

28 சருவ நியமந் தமின்மித வூண்மே
லென்போன் பாதம் வாழ்கவே
ஒருசொற் பேசிற் பெருகும் பலவென்
றுரைப்போன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

29 எந்நாற் கருத்து மனம டக்க
லென்போன் பாதம் வாழ்கவே
உன்னைக் காண வோர்நா லேனென்
றுரைப்போன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

30 ஆசை யாதி யணுக்கள் செயலென்
றருள்வோன் பாதம் வாழ்கவே
ஆசை யறலே ஞான மென்னு
மடிகள் பாதம் வாழ்கவே. (வாழ்க)

31 பெண்ணாண் பேதம் போக்கி டென்று
பகர்வோன் பாதம் வாழ்கவே
மன்ற லதற்கு வழியா மென்னு
முத்தன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

32 பிறருக் கீவ தமக்கா மென்றும்
பெருமான் பாதம் வாழ்கவே
அறியி னீயார் யார்கொ லென்னு
மருளோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

33 தாழத் தாழ நலமிகு மென்று
தாழ்வோன் பாதம் வாழ்கவே
கீழோர் பாலுங் கெடுவெ றுப்பென்
குகன்றன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

34 நாமெ ழிற்பிற ரெழுவ ரென்று
நவில்வோன் பாதம் வாழ்கவே
நாம டங்கி லடங்குவ ரென்னு
நண்பன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

35 சொன்ன சொற்றவ றாதை யென்று
சொல்வோன் பாதம் வாழ்கவே
அன்யர் கார்யத் தகன்றிரு வென்னு
மாப்தன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

36 தாமே யேறப் பழக்க னலமென்
றயவன் பாதம் வாழ்கவே
நாமேற் றூக்கி விடலி னென்னு
நயவன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

37 ஆசா ரம்விட லனர்த்த மாமென்
றறைவோன் பாதம் வாழ்கவே
யோசித் தவற்றின் பொருள்கொ ளென்னும்
யோகி பாதம் வாழ்கவே. (வாழ்க)

38 எதையு மீச ஞெனென் றியற்றென்
றிசைப்போன் பாதம் வாழ்கவே
மதித்தி டுலகோர் கனவா யென்னு
மௌனி பாதம் வாழ்கவே. (வாழ்க)

39 பதிசொற் கேட்டல் சதிக்கழ கென்று
பகர்வோன் பாதம் வாழ்கவே
பதிபோற் சாந்தம் சதியுறு வாளென்
பகவன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

40 பதித்தி டான்மா வின்மன தென்று
பணிப்போன் பாதம் வாழ்கவே
அதுதான் குருசொற் போற்ற லறியென்
றருள்வோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

41 ஈதல் வேண்டா மெதுவு மெமக்கென்
றிசைப்போன் பாதம் வாழ்கவே
பேத நீங்கிற் போது மென்று
புகல்வோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

42 மாயா தைதான் வெளிக்கா மென்று
வகுப்போன் பாதம் வாழ்கவே
அரிவை புருடர்க் கமளியி லேதென்
றறைவோன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

43 குற்றஞ் செயினுங் குணமாக் கொள்ளுங்
குரவன் பாதம் வாழ்கவே
நற்றவ மில்லா நாயேன் றனையாள்
ஞானி பாதம் வாழ்கவே. (வாழ்க)

44 இனன்போ லன்ப ரிதய மலர்த்து
மினியோன் பாதம் வாழ்கவே
அணியா ருணு சலத்தில் வாழு
மமலன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

45 திருச்சுழி யென்னுந் தலத்து தித்த
செல்வன் பாதம் வாழ்கவே
அருளார் சுந்தர மையர் பெற்ற
வழகன் பாதம் வாழ்கவே. (வாழ்க)

வாழ்க வாழ்க வாழ்க வாழ்க
ரமணன் பாதம் வாழ்கவே
வாழ்க வாழ்க வாழ்க வாழ்க
வாழ்க வென்றும் வாழ்கவே.

---

## ஸ்ரீ ரமணபாதமாலை

சம்பூர்ணம்

---

உன்பெருமை யுணராதே
னுரைத்தேனுன் சரிதையினை
யன்னதனி லுளகுறைக
ளவையெல்லாம் பொறுத்தருளி
யென்மனதி லதன்சார
மெப்போதுங் குடிகொள்ள
வன்னையே யநுக்கிரகம்
புரிரமண சற்குருவே.

# ஸ்ரீ ரமண சரிதம் சம்பூர்ணம்

சிவம்

---

உ

# சரிதத்தில் குறிப்பிடப் பெற்ற பதிகங்கள்.

## மாணிக்கவாசக சுவாமிகள்

### அருளிச் செய்த

திருச்சிற்றம்பலக் கோவையார்

---

அன்புடைய நெஞ்சத் திவள்பே துறவம் பலத்தடியா
ரென்பிடை வந்தமிழ் தூறநின் ருடி யிருஞ்சுழியற்
றன்பெடை நையத் தகவழிந் தன்னஞ் சலஞ்சலத்தின்
வன்பெடை மேற்றுயி லும்வய லூரன் வரம்பிலனே

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### அருளிச் செய்த

### தேவாரப் பதிகம்.

திருச்சுழியல்.

பண். நட்டராகம்.

---

1 ஊனுயுயிர் புகலாயக விடமாய்முகில் பொழியும்
வானுய்வரு மதியாய்விதி வருவானிடம் பொழிலின்
றேனுதரித் திசைவண்டின மிழற்றுந்திருச் சுழிய
ஞனவித நினைவார்தமை நலியார்நமன் றமரே.

2 தண்டேர்மழுப் படையான்மழ விடையானெழு கடனஞ்
சுண்டேபுர மெரியச்சிலை வளைத்தானிமை யவர்க்காத்
திண்டேர்மிசை நின்றானவ னுறையுந்திருச் சுழியற்
றொண்டேசெய வல்லாரவர் நல்லார்துய ரிலரே.

3 கவ்வைக்கடல் கதறிக்கொணர் முத்தங்கரைக் கேற்றக்
கொவ்வைத்துவர் வாயார்குடைந் தாடுந்திருச் சுழியற்
றெய்வத்தினை வழிபாடுசெய் தருவாரடி தொழுவா
ரவ்வத்திசைக் கரசாகுவ ரலராள்பிரி யாளே.

4 மலையான்மகண் மடமாதிட யாகத்தவன் மற்றுக்
கொலையானையி னுரிபோர்த்தவெம் பெருமான்றிருச் சுழிய
லலையார்சடை யுடையானடி தொழுவார்பழு துள்ளி
நிலையார்திகழ் புகழானெடு வானத்துயர் வாரே.

5 உற்றானமக் குயரும்மதிச் சடையான்புல னைந்துஞ்
செற்றார்திரு மேனிப்பெரு மானூர்திருச் சுழியல்
பெற்றானினி துறையத்திறம் பாமைத்திரு நாமங்
கற்றாரவர் கதியுட்செல்வ ரேத்தும்மது கடனே.

6 மலந்தாங்கிய பாசப்பிறப் பறுப்பீர்துறைக் கங்கைச்
சலந்தாங்கிய முடியானமர்ந் திடமாந்திருச் சுழிய
னிலந்தாங்கிய மலராற்கொழும் புகையானினைந் தேத்துந்
தலந்தாங்கிய புகழான்மிகுத் தவமாஞ்சது ராமே.

7 சைவத்தசெவ் வுருவன்றிரு நீற்றன்னுரு மேற்றன்
கைவைத்தொரு சிலையாலரண் மூன்றுமெரி செய்தான்
றெய்வத்தவர் தொழுதேத்திய குழகன்றிருச் சுழியன்
மெய்வைத்தடி நினைவார்வினை தீர்தலெளி தன்றே.

8 பூவேந்திய பீடத்தவன் றானுமட லரியுங்
கோவேந்திய வினையத்தொடு குறுகப்புக லறியார்
சேவேந்திய கொடியானவ னுறையுந்திருச் சுழியன்
மாவேந்திய கரத்தானெம சிரத்தான்றன தடியே.

9 கொண்டாடுதல் புரியாவரு தக்கன்பெரு வேள்விச்
செண்டாடுதல் புரிந்தான்றிருச் சுழியற்பெரு மானைக்
குண்டாடிய சமணாதர்கள் குடைச்சாக்கிய ரறியா
மிண்டாடிய வதுசெய்தது வானல்வரு விதியே.

10 நீரூர்தரு நிமலன்றிரு மலையார்க்கய லருகே
தேரூர்தரு மரக்கன்சிர நெரித்தான்றிருச் சுழியல்
பேரூரென வுறைவானடி பெயர்நாவலர் கோமா
னூரான தமிழ்மாலைபத் தறிவார்துய ரிலரே.

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் திருமேனிநாதர்; அம்மன்பெயர்
துணைமாலைநாயகி.

---

# அநுபந்தம்.

## *யாஞர்

யாஞரென்கிற விசாரணையே மோக்ஷத்தைக் கொடுக்கும்

1. யாஞர்?

சப்த தாதுக்களாலாகிய ஸ்தூலதேகம் நானன்று.

சத்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தமென்று செல்லப்பட்ட பஞ்ச விடயங்களையுந் தனித்தனியே யறிகின்ற சுரோத்திரம். துவக்கு, சக்ஷு, ஜிஹ்வை, கிராணம் என்கிற ஞானேந்திரியங்க ளைந்தும் நானன்று.

வசனம், கமனம், தானம், மலவிசரஜ்ஜனம், ஆனந்தித்தல் என்கிற ஐந்து தொழில்களையுஞ் செய்கின்ற வாக்கு, பாணி பாதம். பாயு, உபத்த மென்னும் கன்மேந்திரியங்களைந்தும் நான ன்று.

சுவாஸாதி ஐந்தொழில்களையுஞ் செய்கின்ற பிராணுதி பஞ்ச வாயுக்களும் நானன்று.

சர்வ விஷயங்களும் சர்வ தொழில்களு மற்று விஷய வா சனைகளுடன் மாத்திரம் பொருந்தியிருக்கும் அஞ்ஞானமும் நான ன்று.

2. இவை யெல்லாம் நானல்லாவிடில் பின்னை யாஞர்?

மேற்சொல்லியவை யாவும் நானல்ல வென்று நேதிசெய்து நீக்கித் தனித்து நிற்கும் அறிவே நான்.

---

* இது ஆன்ம விசாரத்தைப் பற்றி பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷி அவர்களைச் சில சமயங்களில் வினவிய விஞக்களையும் அவர்கள் அளித்தருளிய விடைகளையும் ஒருவாறு தொகுத்துச் செய்யப்பட்டது.

3. அறிவின் சொரூபம் என்ன?

அறிவின் சொரூபம் சச்சிதானந்தம்.

நானென்னும் நினைவு கிஞ்சித்து மில்லாத இடம் இதுவே மோன மென்று சொல்லப்படும். இவ்வாத்மா ஒன்றேயுள்ளது. ஜக, ஜீவ, ஈச்வரர்கள் இப்பி வெள்ளிபோலக் கற்பனைகள். ஆதலால் சொரூபமே கடவுள், சொரூபமே நான், சொரூபமே ஜீவர்கள், சொரூபமே ஜகம், எல்லாம் சிவ சொரூபமே.

4. சொரூப தரிசன மெப்போது கிடைக்கும்?

திருசியம் நீங்கிய விடத்துத் திருக்காகிய சொரூப தரிசன முண்டாம்.

5. திருசியமுள்ளபோதே சொரூப தரிசனம் உண்டாகாதா?

உண்டாகாது, திருக்கும், திருசியமும் ரஜ்ஜு சர்ப்பம் போலுமாம். கற்பித சர்ப்பஞானம் போகா விடத்து அதிஷ்டான ரஜ்ஜு ஞானம் தோன்றுமா?

6. திருசியமாகிய ஜகம் எப்போது நீங்கும்?

சர்வ அறிவுக்கும் சர்வ தொழிற்கும் காரணமாகிய மன மடங்கினுல் ஜகம் மறையும்.

7. மனதின் சொரூபம் என்ன?

நினைவே மனதின் சொரூபம். அது ஓர்சக்தி; அது சகல பொருள்களுமாய் விரிந்திருக்கும். அது தன்னுள், அதாவது சொரூபத்தில் லயமாகும் போது சொரூபம் தோன்றும். வெளி ப்படும் போது ஜகம் தோன்றும். ஆகையால் ஜகம் தோன்றும் போது சொரூபம் தோன்ருது.

8. மனம் எப்படி அடங்கும்?

யாரு ரென்கிற விசாரணை யினுலேயே மனமடங்கும் யாரு ரென்கிற நினைவானது மற்ற நினைவுகளெல்லாவற்றையு மழித்துப் பிணஞ்சுடுதடி போலத் தானுமழியும். பிறகு சொரூப தரிசன முண்டாம். யான் என்கிற நினைவு அடங்கும்போது மூச்சு மடங்கும். அகங்காரம் எங்கிருந்து உற்பத்தியோ அங்கேதான் மூச்சு முற்பத்தி யாகிறது. எதைச் செய்தாலும் நான் என்கிற அகங்கார மற்றுச் செய்யவேண்டும். அப்படி யிருந்தால் தன் மனைவியும் ஜகதீசுவரியைப் போல் தோன்றுவாள் எவன் தன்னையே கடவுளாகிய சொரூபத்தினிடத்தில் தியாகஞ் செய்கிருனே அவனே பக்திமான்.

9. மனமடங்குதற்கு வேறே உபாயங்களில்லையா?

விசாரணையைத் தவிர வேறே தகுந்த உபாயங்களில்லை. மற்ற உபாயங்களினுல் அடக்கினுல் மனம் அடங்கினுற் போலிருந்து மறுபடியும் கிளம்பி விடும்.

10. விஷய வாசனைகள் அளவற்றன வாய்க்கடலில் அலை போலத் தோன்றுகின்றனவே, அவைகளெல்லா மெப்போது நீங்கு i?

சொரூபத்தியானங் கிளம்பக்கிளம்ப வாசனைகளெல்லாம் அடங்கிவிடும்.

11. தொன்றுதொட்டு வருகிற சகல விஷய வாசனைகளும் நீங்கி சொரூபமாத்திரமா யிருக்கமுடியுமா?

முடியுமா முடியாதா வென்கிற சந்தேக நினைவுக்கு யிடங் கொடாமல் சொரூபத்தியானத்தை யொரே பிடியாகப் பிடிக்க வேண்டும். அங்ஙனம் மனதின் சொரூபத்தை விசாரித்துக்கொண்டேபோனுல் மனம் தானுக முடியும்.

12. இவ்விசாரம் எதுவரை வேண்டும்?

மனதில் எதுவரையில் விஷயவாசனைகளிருக்கின்றனவோ அதுவரையில் யானூர் என்கிற விசாரணையும் வேண்டும்.

கோட்டையில் எதிரிகள் உள்ளவரையில் வெளியில் வந்து கொண்டேயிருப்பார்கள் வரவர வெட்டிக்கொண்டேயிருந்தால் கோட்டை கைவசப்படும். அதுபோல் நினைவுகள் தோன்றத் தோன்ற அப்போதைக்கப்போதே விசார ஞானத்தாலவைகளை நசிப்பிக்கவேண்டும்.

உற்பத்தியாகும் நினைவுகளை யெல்லாம் ஒன்று கூட விடாமல் உற்பத்தி ஸ்தானத்திலேயே நசுக்கிப்போடுதலே வைராக்கியமாகும். சொரூபத்தை யடைகிற வரையில் விசாரணையை விடக்கூடாது.

13 சொரூபத்தினியல் பென்னை?

எதார்த்தமாயுள்ள தான்ம சொரூப மொன்றே ஜக, ஜீவ, ஈசுவரர்களிப்பியில் வெள்ளி போலக்கற்பனைகள். இவைமூன்று மேக காலத்திற்றோன்றி யேக காலத்தில் மறைகின்றன. நானென்கிற நினைவு கிஞ்சித்து மில்லாத விடமே சொரூபமாகும் அதுவே மோனமென்று சொல்லப்படும். சொரூபமே கடவுள். சொரூபமே நான். சொரூபமே சகம்.

14. பக்தருண் மேலான பக்தன் யார்?

எவன்றன்னையே கடவுளாகிற சொரூபத்தினிடத்திற் றியாகஞ் செய்கிறானோ அவனே சிறந்த பக்திமான்.

15. வைராக்கியமாவது யாது?

எந்த வெந்த நினைவுகளுற் பத்தியாகின்றனவோ அவைகளை

யெல்லா மொன்றுகூட விடாமற் உற்பத்தி ஸ்தானத்திலேயே நசுக்கிப்போடுதலே வைராக்கியமாம். முத்துக்குளிப்போர் தம் மிடையிற் கல்லைக் கட்டிக்கொண்டு கடலினுளாழ்ந்து மூழ்கி யதனடியிற் கிடக்கும் முத்தை யெப்படி யெடுக்கிறார்களோ அப் படியே ஒவ்வொருவரும் வைராக்கியத்துடன் றன்னுளாழ்ந்து மூழ்கினாலான்ம முத்தையடையலாம் நிரந்தரஸ்வரூப ஸ்மரணை யிருக்க வேண்டியது. அதுவே போதும்.

16. கடவுளாலுங் குருவாலும் ஒரு ஜீவனைச்சிவமாக்கமுடியாதா?

கடவுளுங்குருவு முத்தியடைவதற்கு வழியைக்காட்டி ஜீவர் களை முத்தியிற் சேர்க்க முடியும். ஒவ்வொருவரும் தன்னுடைய முயற்சியினாலேயே கடவுளல்லது குருகாட்டிய வழிப்படி நடந்து முத்தி யடையவேண்டும்.

தன்னைத் தன்னுடைய ஞானக்கண்ணாற்றானே யறியவே ண்டுமல்லாமல் பிறரா லெப்படி யறியலாம.

17. இராம னென்பவன் றன்னை இராம னென்றறிவதற்குக் கண்ணாடி வேண்டுமோ?

முத்தியில் விருப்பமுள்ளவனுக்குத் தனக்கன்னியமாயுள்ள தத்துவங்களின் விசாரணை யவசியமா?

அம்பட்டன் குப்பையைக் கூட்டித்தள்ள வேண்டிய வொரு வன் அதிலித்தனை மயிர்களுள்ளன வென்று கணக்கிடுவதாலும் அவற்றின் நீளமுதலிய குணங்களை யாராய்வதாலும் பயனில்லை. அது போற்றன்னை யறியவேண்டிய வொருவன் றன்னை மறைத் துக் கொண்டிருக்குந் தத்துவங்களனைத்தையும் ஒரு மிக்கச் சேர் த்துத் தள்ளாமற் றத்துவங்களித் தனையென்று கணக்கிடுவதா லும் அவற்றின் குணங்களையுந் தொழில்களையும் விசாரிப்பதாலும் பயனில்லை. பிரபஞ்சத்தையொரு சொப்பனத்தைப் போலெண் ணிக் கொள்ள வேண்டியது,

18 நனவிற்குங் கனவிற்கும் பேதமில்லையா?

நனவுஸ்திரம் கனவஸ்திரம் இதைத்தவிரவேறுபேதமில்லை; நனவினடக்கும் விவகாரங்களெல்லா மெவ்வளவு உண்மையாகத் தோன்றுகின்றனவோ அப்படியே கனவினடக்கும் விவகாரங் களும் கனவுகாலத்தி லவ்வளவுண்மை யாகத்தோன்றுகின்றன. கனவில் மனமானது வேறொரு தேகத்தை யெடுத்துக் கொள் கிறது.

ஓர்மாதை புணர்ந்ததாக சொர்ப்பனங்கண்ட வொருவனுக்கு நனவுடலின் கணிந்திரிய ஸ்கலித முண்டாதற்குக் காரணமென் னவென்றூற் கனவுடலிலிருந்து நனவுடலில் மனம்புகுகின்ற வேகத்தாலப்படி நிகழ்கின்றது சாக்கிரஞ் சொப்பன மிரண்டி லும் நினைவும் நாமரூபங்களும் ஏக காலத்தில் தோன்றுகின்றன.

19 முமூட்சுக்களுக்கு நூற்படிப்பாற் பயனுண்டா?
எந்நூலிலும் முக்தியடைவதற்கு மனதை யடக்கவேண்டு மென் றேசொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் மனோநிக்கிரகமேநூல் களின் கருத்தென்றறிந்து கொண்ட பிறகு நூல்களையளவின்றிப் படிப்பதாற் பயனில்லை மனதை யடக்குவதற்குத் தன்னையா ரென்று விசாரிக்க வேண்டும். தன்னையா ரென்று தன்னுளே விசாரிக்க வேண்டுமல்லாமல் எப்படி நூல்களிற் றன்னை விசாரிப் பது? தானென்பது பஞ்சகோசங்களுக்குள்ளே யிருக்கும் வஸ்து நூல்களோ பஞ்சகோசங்களுக்கு வெளியிலிருக்கும் வஸ்து.ஆகை யாற் பஞ்சகோசங்களையும் நீக்கி விசாரிக்க வேண்டிய நானெனும் பொருளை நூல்களில் விசாரிப்பது வீணே. சதாகாலமு மனதை யான்மாவில் வைத்திருப்பதற்குத் தாஞன்ம விசாரமென்றுபெயர். படித்த நூல்களனைத்தையும் ஓர் காலத்தில் மறக்கவேண்டியதாய் முடியும்.

20 சுகமாவதியாது? அது ஆன்மாவின் கணுள்ளதா அல்லது பிரபஞ்சப் பொருள் களின்கணுள்ளதா?

சுகமென்பதான் மாவின் சொரூபமே. சுகம் வேறன்றான்ம சொரூபம் வேறன்று ஆன்ம சுகமொன்றே யுள்ளது; அதுவே சத்தியமானது. பிரபஞ்ச பொருளி லொன்றிலாவது சுகமென்பது கிடையாது. அவைகளிலிருந்து சுகம் கிடைக்கிறதாக நாம் நமது அவிவேகத் தாலினைக்கிறோம். உண்மையில் நமதெண்ணங்கள் பூர்த்தியாகிற போதெல்லாம் மனமானது தன்னுடைய யதாஸ்தானத்துக்குத் திரும்பி ஆன்ம சுகத்தையே யனுபவிக்கிறது. அப்படியே தூக்கம் மூர்ச்சை, சமாதிகளிலும் இச்சித்த பொருள் லபிக்கிற போதும வெறுத்த பொருள்களுக்குக் கெடுதி விளைவிக்கிற காலத்தும் மனமந்தர்முகமாகி ஆன்ம சுகத்தையே யனுபவிக்கின்றது. இப்படி மனமானது ஆன்மாவை விட்டு வெளியே போவதும் உள்ளே திரும்புகிறதுமாக ஓய்வில்லாமலலைகிறது. வெளியில் வரும்போது துக்கத்தை யனுபவிக்கிறது மாத்தினடியினிழல் சுகமாயிருக்கிறது. வெளியிற் சூரிய வெப்பங் கொடுமையாயிருக்கிறது. வெளியிலலையு மொருவனிழலிற் சென்று குளிர்ச்சி யடைகிறான். சிறிது நேரத்திற்குப் பிறகு வெளியிற் கிளம்பி வெப்பத்தின் கொடுமைக்காற்றாது மறுபடியும் மாத்தின்கீழ் வருகிறான். இம்மாதிரி நிழலிலிருந்து வெயிலிற் போவதும் வெயிலிலிருந்து நிழலிற் செல்வதுமாக இருக்கிறான். இப்படிச் செய்பவன் விவேகமில்லாதவன். ஆனால் விவேகமுள்ளவனோ நிழலை விட்டு நீங்கான். அப்படியே ஞானியின் மனமும் பிரமத்தை விடுகிறதில்லை; ஆனாலஞ்ஞானியின் மனமோ பிரபஞ்சத்திற்றிரிந்து துக்கப்படுகிறதுஞ் சிறிது நேரம் பிரமத்திற்றிரும்பி சுகத்தை யடைகிறதுமாக விருக்கிறது.

சகமென்பது நினைவே; சகமறைகின்றபோது மனமானந்தத்தை யனுபவிக்கின்றது-சகந்தோன்றுகிறபோது மனந் துக்கத்தை யனுபவிக்கிறது.

21 ஞான திருஷ்டியென்றா லருத்தமென்ன?

சும்மாயிருப்பதற்குத் தான் ஞானதிருஷ்டியென்று பெயர். சும்மாயிருப்பதாவது மனதை யான்மாவி லயிக்கச் செய்வதே அன்றி, பிறர் கருத்தறிதல், முக்கால முணர்தல், தூரதேயத்தி னடப்பனவறிதல் முதலியவை ஞானதிருஷ்டியாகா.

22 நிராசைக்கும் ஞானத்திற்குஞ் சம்பந்தமென்ன ?

நிராசையே ஞானம். நிராசைவேறு ஞானம் வேறன்று. ஞானமென்பது ஒரு பொருளுந் தோன்றாமலிருப்பது. நிராசை யென்பது ஒரு பொருளிலும் மனஞ் செல்லாமலிருப்பது.

23 விசாரணைக்குந் தியானத்திற்கும் பேதமென்ன?

தியானமாவது தன்னைப் பிரம மென்றும் சச்சிதானந்த மென்றும் பாவிப்பது. விசாரணையாவது தன்னிடத்திலேயே மனதை வைத்துக் கொண்டிருப்பது.

24 ஆவியை யீசனுக்குக் கொடுத்த லென்ற லருத்த மென்ன?

ஆன்ம சிந்தனையைத் தவிர வேறு சிந்தனைகள் கிளம்புவ தற்கு இடங்கொடாமலிருப்பதே ஆவியை யீசனுக்குக் கொடுத்த லாம்.

25 முக்தி யென்ற லருத்த மென்ன?

பந்தத்திலிருப்பவன் யாரென்று விசாரித்து தன்னுடைய யதார்த்த சொரூபத்தைத் தெரிந்து கொள்வதே முக்தி.

26 ஜகத்சிருஷ்டிக்குக் காரண மென்ன?

ஈஸ்வர சங்கற்பம்.

ஈஸ்வர சங்கற்பத்துக்குக் காரண மென்ன?

இச்சா சங்கற்ப வெத்தன மின்றி யெழுந்த ஆதித்தன் சந்நிதி மாத்திரத்தால் காந்தக்கல் அக்கினியைக் கக்குவதும்நீர்வற்றுதலும் லோகம் தத்தங்காரியங்களில் பிரவிர்த்தித்து இயற்றி யடங்குதலும் காந்தத்தின் முன் ஊசி சேஷ்டித்தலும் போல சங்கற்ப ரகிதராயிருக்கும் ஈஸ்வர சந்நிதான விசேஷ மாத்திரத்தால் நடக்கும் முத்தொழில் அல்லது பஞ்சகிருத்தியங் கட்குட்பட்ட சீவர்களதத்தம் கர்மானு சாரம் சேஷ்டித்தடங்குகின்றனர் அன்றி அவர் சங்கற்ப சகிதருமல்ல. ஒரு கருமமும் அவரை யொட்டாது. லோக கருமங்கள் சூரியனை யொட்டாதது போலும். ஏனைய சதுர்ப் பூதங்களின் குணாகுணங்கள் வியாபகமான ஆகாயத்தை யொட்டாதது போலும்.

முற்றுப் பெற்றது

---

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 7 | 4 | யிள் | யின் |
| 9 | 13 | வூர்ச் | வூர் |
| 12 | 6 | ரஙக | ரங்க |
| 17 | 9 | ெ ய | பெய |
| ,, | 18 | வோர் | ந்தோர் |
| ,, | ,, | ள்கிறார் | ளினார் |
| ,, | 21 | கிரி | கிரிச் |
| ,, | 22 | த்தத | த்தத் |
| 18 | 15 | வ ச | வாச |
| ,, | 18 | மூன | மூன் |
| 20 | 11 | சோரந் | சோர்ந் |
| ,, | 13 | போற | போற் |
| 22 | 11 | மென்க் | மெனக் |
| 23 | 13 | யாா | யார் |
| 24 | 7 | ணாத் | ணர்த் |
| ,, | 19 | ததை | தவை |
| 28 | ,, | பபி | பயி |
| 32 | 25 | னு | று |
| 36 | 18 | ணி | ண |
| 37 | 1 | பதிகங்கள் | பாட்டும் பதிகமும் |
| ,, | 5 | டைய | டை |
| 38 | 7 | தரு | தெழு |
| ,, | 11 | துள்ளி | துள்ளம் |
| ,, | 20 | மிகுத் | மிகு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 40 | 8 | சரஜ் | சர்ஜ் |
| 44 | 11 | டவ | டவு |
| ,, | 15 | 17. இ | இ |
| ,, | 17 | மு. | 17. மு |
| 45 | 4 | தேர் | தேர |
| ,, | 8 | சொர் | சொ |
| 47 | 1 | மாயி | மாவி |
| ,, | 2 | ,, | ,, |
| ,, | ,, | வி | வில் |
| 48 | 8 | களை | கள் |
| ,, | 11 | குணுங் | குணங் |

அனுபந்தத்தில் பக்த, வைராக்கிய, சொரூப இயல்புகள் இரு முறை கூறப்பட்டுள்ளன.



அடியிற்கண்ட புத்தகங்கள் தேவையானவர்கள் கீழ்க்குறித்த விலாசத்திற்கு எழுதி விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

---

| | | ரூ | அ | ப |
|---|---|---|---|---|
| 1 | ஸ்ரீ ரமண கீதை தமிழ் தாத்பரியத்துடன் உயர்ந்த பைண்டு. | 1 | 0 | 0 |
| 2 | ,, ,, சாதாரண பைண்டு. | 0 | 12 | 0 |
| 3 | ஷை நாகராக்ஷரத்தில் மூலம். | 0 | 4 | 0 |
| 4 | ஸ்ரீ விவேக சூடாமணி தமிழ் வசனம | 0 | 6 | 0 |
| 5 | தேவி காலோத்தரம் தமிழ் வெண்பா | 0 | 2 | 0 |
| 6 | ஸ்ரீ அருணாசல ஸ்துதி பஞ்சகம், பஞ்சரத்னம், பதிகம், அஷ்டகம், பஞ்சகம் அடங்கியது | 0 | 2 | 0 |
| 7 | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம் உரையுடன் | 0 | 0 | 6 |

ஸ்ரீ ரமணீய வாணீ புஸ்தகாலயம்,
திருவண்ணாமலை.

